# ஜனசக்தி

தின இதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

பக்கம் 4 விலை 1 அணு இலங்கையில் 10 சதம் (விமானத் தபால்)

மலர் 13] சென்னை 11-10-56, துன்முகி புரட்டாசி—வியாழன் 26 (வெளியூர் 12-10-56 புரட்டாசி—வெள்ளி 27) [இதழ் 57


### சிறைக்கூடத்தில் தேசபக்தர் பட்டியல்

புதுடெல்லி, அக். 10—

1914 முதல் 1942-ம் ஆண்டு வரை சுதந்திர இயக்கத்தில் அரும்பணியாற்றிய பகத்சிங், படுகேச்வர் தத், சென்குப்தா முதலிய 47 தலைவர்கள் நாமம் பொறித்த சாஸனம் ஒன்றை மந்திரி பந்த் டெல்லி ஜில்லா சிறையில் திறந்து வைத்தார்.

### கன்யாகுமரியில் காந்திஜி நினைவுச் சின்னம்

திருவனந்தபுரம், அக். 10—

கன்யாகுமரியில் அக்டோபர் 30-ந் தேதியன்று காந்திஜியின் நினைவுச் சின்னமொன்றை ஜனாதிபதி ராஜேந்திரப் பிரசாத் திறந்து வைப்பாரெனத் தெரிய வருகிறது.

# நேருவுக்கும் ராஜாஜிக்கும் பதில்



கூட்டத்தில் தோழர் கோபாலன் பேசுகிறார்—வி. ராதா மொழி பெயர்க்கிறார்.
—போட்டோ: ஜே. எம். கே.

## கம்யூனிஸ்ட் கட்சி மக்கள் மத்தியில் மட்டுமல்ல, ஆட்சி பீடத்திலும் அமரப்போகிறது!

### தேர்தல் துவக்க விழாவில் தோழர் ஏ. கே. கோபாலன் பேச்சு

சென்னை, அக். 11—

"கம்யூனிஸ்ட் கட்சி குழப்பத்தில் ஆழ்ந்து கிடக்கிறது; பலஹீனமாகிவிட்டது; அது இந்தியாவின் படத்திலேயே இல்லை. அதைப் பார்த்து பயப்படாதீர்கள் என்று ராஜாஜி பேசியுள்ளதைப் பத்திரிகைகளில் படித்தேன். நான் அவருக்குச் சொல்லுகிறேன். தேர்தலுக்குப்பிறகு, கம்யூனிஸ்ட் கட்சி தேசப் படத்தில் இருப்பதுமட்டுமல்ல, கேரளத்தைப் பொருத்தமட்டில், சர்க்காரிலும் இருக்கப்போகிறது. இதை ராஜாஜி பார்க்கத்தான்போகிறார்."

இவ்வாறு பலத்த கைதட்டலுக்கும் சிரிப்பொலிகளுக்குமிடையே, சென்னை வண்ணையம்பதியில் நேற்று நடைபெற்ற தேர்தல் போராட்ட துவக்கவிழாப் பொதுக் கூட்டத்தில், பாராளுமன்ற எதிர்க் கட்சித் தலைவர் தோழர் ஏ. கே. கோபாலன் சவால் விட்டார்.

கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை ஜில்லா கமிட்டிசார்பில் நடந்த இக்கூட்டத்துக்கு சென்னை சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர் தோழர் பி. ராமமூர்த்தி தலைமை வகித்தார்.

#### ராஜாஜி கூறும் எதிர்க்கட்சி

மேலும் ஏ. கே. ஜி. பேசுகையில், "காங்கிரஸ் சர்க்காருக்கு பலமான எதிர்க்கட்சி வேண்டுமென்கிறார் ராஜாஜி. அவர் விரும்பும் எதிர்க்கட்சி எது? கம்யூனிஸ்ட் கட்சியா? அல்ல. பிரஜா சோஷலிஸ்ட் கட்சியா? அல்ல. பின் எது? காங்கிரஸை எதிர்க்க காங்கிரஸ்! ஆளும் காங்கிரஸை எதிர்க்க, ஆளாத காங்கிரஸ்! ராஜாஜி ஆட்சியிலிருந்தால் காமராஜ் எதிர்க்க வேண்டும். காமராஜ் ஆட்சியிலிருந்தால் ராஜாஜி எதிர்க்க வேண்டும். அதாவது கோஷ்டி சண்டை, அதாவது சட்டசபையில் காங்கிரஸின் தவறான கொள்கைகளை எவ்வளவு வேண்

(2-ம் பக்கம் பார்க்க)

### ஜெர்மன் ஐக்கிய பிரச்சினை

பான், அக். 11—

ஜெனிவாவில் நடைபெற்ற வல்லரசுகளின் தலைவர்கள் கூட்டத்தில் ஏற்பட்ட உடன்பாட்டை ஒட்டி, ஜெர்மன் ஐக்கியம்பற்றி சோவியத் கருத்து என்ன என்பதை வினவும் குறிப்பு ஒன்றை பிரிட்டிஷ் சர்க்கார் சோவியத் பிரதிநிதியிடம் கொடுத்திருக்கிறது.

மேற்கு ஜெர்மனி ஜெர்மன் ஐக்கியப் பற்றி சர்வதேச அபிப்பிராயங்களை அறிய முன்கை எடுத்துள்ள இக்குறிப்பு வரவேற்கிறது.

## சங்க அங்கீகார மசோதா

### ராஜ்ய தொழிலாளர் ஆலோசனை போர்ட் கூட்டம்

சென்னை, அக். 11—

நேற்று சர்க்கார் அலுவலகத்தில் சென்னை மாகாண தொழிலாளர் ஆலோசனை போர்டின் கூட்டம் நடைபெற்றது. தலைமை வகித்த மந்திரி திரு. பக்தவத்சலம் சென்ற கூட்டத்துக்குப் பின் மாகாணத்திலும் இந்தியாவிலும் தொழிலாளர்களுக்காகநிறைவேற்றப்பட்ட சட்டங்கள், இங்கு எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகள், கன்சிலியேஷன் முதலியவைகளைப் பற்றி குறிப்பிட்டார். வீடு கட்டும் திட்டம் பற்றி சொல்லுகையில் 5 ஆண்டுகளில் சர்க்கார் பொறுப்பில் 2500 வீடுகள் கட்டப்படும் என குறிப்பிட்டார். இறுதியாக தொழிற் சங்க அங்கிகார மசோதாவை முன்வைத்து விவாதம் நடந்தது.

இவ் விவாதத்தில் பி. ராமமூர்த்தி எம்.எல்.ஏ., ஆர். வெங்கட்டராமன் எம்.பி., S. C. C. அந்தோணிப் பிள்ளை எம்.எல்.ஏ., ஜி. ராமானுஜம், கே. டி. கே. தங்கமணி, எஸ். கிருஷ்ணமூர்த்தி, சி. பரதன், ஸ்ரீ வெங்கடசாமி (தென் இந்திய மில் முதலாளிகள் சங்க தலைவர்) ஸ்ரீ கோத்தாரி முதலியோர் பேசினார்கள். எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ. அவர்களும் கூட்டத்தில் பங்கெடுத்தார்.

பி. ராமமூர்த்தி பேசும்போது இம் மதோதா வரவேற்கத்தக்கதென்றும், இன்றைய சங்க வளர்ச்சி நிலைமையில் தொழிற்சாலைவாரியாக பார்ப்பது சரி என்றும், தொழிற்சாலையிலுள்ள எல்லா தொழிலாளர்களும் ஓட்போடவேண்டுமெனவும், அங்கிகாரத்தை ரத்துசெய்வது சரியல்லவெனவும் குறிப்பிட்டதாக தெரிகிறது. சங்கங்கள் இல்லாத இடங்களில் விசேஷ கமிட்டி அமைப்பது சரியல்ல எனவும் சர்க்கார் சிப்பந்திகளுக்கு விதிவிலக்கு கூடாது என்பதும் எடுத்துச் சொல்லப்பட்டதாக தெரிகிறது. ஆர். வெங்கட்டராமன் மத்ய சர்க்கார்தான் மசோதா கொண்டுவர வேண்டுமென்றாராம். மற்றவர்கள் மாகாண கர்க்கார் கொண்டு வருவதை ஆதரித்தனர் எனக் கூறப்படுகிறது. நவம்பர் மாதம் இம்மசோதா வரலாம்.

ஸ்டாம்ப் ஆக்ட் விதிவிலக்கு போன்ற இதர விஷயங்களும் விவாதிக்கப்பட்டதாக தெரிய வருகிறது.

### ரஷ்யாவுக்கு யூகோ ராணுவ தூதுகோஷ்டி

பெல்கிரேட், அக். 11—

யூகோஸ்லாவிய ராணுவத்தின் தூதுகோஷ்டி ஒன்று சோவியத் ராணுவத்தாரின் அன்பழைப்பை ஏற்று நட்புறவு விஜயம் செய்யும் நோக்கத்துடன் நேற்று இங்கிருந்து புறப்பட்டது.

### மால்டாவில் பிரிட்டிஷ் சிப்பாய்கள் கலகம்

வலட்டா, அக். 11—

மால்டாவில் முகாமடித்துள்ள பிரிட்டிஷ் பீரங்கிப் படையினர் அக். 9ந் தேதி தமது குறைபாடுகளின் கோரிக்கை பட்டியலுடன் அதிகாரிகள் விடுதிக்குள் பிரவேசித்து கலகம் நடத்தியதாகத் தெரிகிறது.

பெப்சு ராஜ்யத்தில்

## நில உடமைக்கு எல்லை 30 ஏக்கர்

### அடிப்படை நிலச் சீர்திருத்த சட்டம் நிறைவேறியது

பாட்டியாலா, அக். 10—

பெப்சு ராஜ்ய சட்டசபை நில உடமைக்கு வரம்பு கட்டும் மசோதாவை ஏகமனதாக நிறைவேற்றியுள்ளது.

இன்றைய, எதிர்கால நில உடமை 30 (ஸ்டாண்டர்டு) ஏக்கருக்கு மேல் இருக்கக் கூடாதென்பது அந்த நிலஉடமையின் எல்லை. அகதிகளைப் பொருத்த வரையில் 40 ஏக்கராக இருக்கலாம்.

20 ஏக்கர் தான் நிலஉடமையின் எல்லையாக வேண்டுமென்று ஆரம்ப மசோதா கூறியது. ஆனால் இதை 30 ஏக்கராக உயர்த்தியதற்குக் காரணம் நிலப்பிரபுக்கள், பழங்கள் போன்ற தோட்டப் பயிர்கள் சாகுபடி செய்வதற்கு ஊக்கமளிப்பதற்காகவே என்று ராஜ்ய ரெவினியூ மந்திரி பிரிஷ்பரன் கூறினார்.

வரம்புக்கு மேலுள்ள நிலத்தை எடுத்துக்கொள்ளும்பொழுதுநிலச் சுவான்தார்களுக்கு நஷ்டஈடு கீழ் வரும் விதத்தில் கொடுக்கப்படும.

வாரம், குத்தகைதாரர்களால் சாகுபடி செய்யப்படும் நிலமாக இருந்தால் நிலச்சுவான்தாருக்கு கொடுக்கவேண்டிய நஷ்டஈடு ஏக்கருக்கு நிலவரியைப் போல் 90 மடங்கு அல்லது ரூ. 200 இது இரண்டில் எது குறைவோ அந்தத் தொகைதான் நஷ்டஈடுத் தொகை.

நிலச் சுவான்தாரின் சொந்த சாகுபடி'யி லிருக்கும் நிலமாக இருந்தால் முதல் 25 ஏக்கருக்கு நியாய வாரத்தைப் போல் 12 மடங்கு; அடுத்த 25 ஏக்கர்களுக்கு நியாய வாரத்தைப் போல் 9 மடங்கு அல்லது நில வரியைப் போல் 90 மடங்கு; அல்லது ரூ. 250 பெரிய சொத்துக்காரர்களுக்கு இதில் எது குறைவோ அது நஷ்டஈடாக கொடுக்கப்படும்.

இந்த மசோதா நிலம் எவ்விதம் வினியோகிக்கப்படும் என்பதைப் பற்றியும் கூறுகிறது.

15 (ஸ்டாண்டர்டு) ஏக்கருக்குக் குறைவாக நிலம் வைத்துள்ள வாரம் குத்தகைதார் நிலத்திலிருந்து விரட்டப்படமாட்டார். மேற்கூறிய நஷ்டஈடுத் தொகையை சிறு தவணைகளில் கொடுத்த உடன் அந்த நிலத்தின் உரிமையாளராகப் பட்டா கொடுக்கப் படுவார்.

5 ஏக்கர் வரை நிலம் வைத்துள்ள வாரம் குத்தகைதார் எக்காரணத்தைக் கொண்டும் நிலத்திலிருந்து அவருக்கு வேறுநிலம் கொடுக்கப்படும் வரையில் அப்புறப்படுத்தப்படமாட்டார்.

விதவைகள், மைனர்கள், மணமாகாத பெண்கள் ராணுவ சேவகர்கள் இந்த மசோதாவின் விதிகளிலிருந்து விலக்களிக்கப்பட்டுள்ளனர்.

## பிடிவாத உச்சியிலிருந்து இறக்கம்

### பிரிட்டிஷ், பிரெஞ்சு, எகிப்து வெளிவிவகார மந்திரிகள் பேச்சுவார்த்தை

நியூயார்க், அக். 11—

சூயஸ் பிரச்சினைக்குப் பரிகாரம் காணும் நோக்கத்துடன் பிரிட்டன், பிரான்ஸ், எகிப்து வெளிவிவகார மந்திரிகளின் இரகசியக் கூட்டம் நேற்று நடைபெற்றது. ஐ. நா. பந்தோபஸ்துக் கவுன்சிலில் தமக்குப் போதிய ஆதரவு கிடைக்கவில்லை என்பதை உணர்ந்தே இந்த நேரடி பேச்சு வார்த்தைகளுக்கு பிரிட்டனும் பிரான்சும் இணங்கி வந்ததாக விஷயமறிந்த வட்டாரங்கள் கூறுகின்றன.

இக்கூட்டம் ஐ. நா. பொதுச் செயலாளர் காரியாலயத்தில் நடைபெற்றது. சூயஸ் பிரச்சினை பற்றிய ஆங்கிலேய பிரெஞ்சு திட்டம் மட்டுமே இதில் விவாதிக்கப்பட்டது. கூட்டம் மேலும் தொடர்ந்து நடக்கும்.

கடந்த சில நாட்களாக ஜனாதிபதி நாஸருடனும் பிரிட்டிஷ் சர்க்கார் தலைவர்களுடனும் கலந்து பேசிவந்துள்ள இந்திய தூதர் திரு. வி. கே. கிருஷ்ணமேனனை லாயிட் சந்தித்தார்.

கால்வாய் பிரச்சினையில் பிரிட்டனுக்கும் பிரான்சுக்குமிடையே கருத்து வேற்றுமை இருப்பதாகக் கூறுவது வெறும் கட்டுக் கதை என்று இருநாட்டு வெளி விவகார மந்திரிகளும் மறுத்துள்ளனர். இந்த ஹேஷ்யங்களை அமெரிக்க 'வாஷிங்டன் போஸ்ட்' பத்திரிகையே கிளப்பியிருக்கிறது.

சூயஸ் கால்வாய் மார்க்கமாக கப்பல்கள் சர்வ சாதாரணமாகச் சென்று வருவதாயும் அக். 9ந் தேதி ஒரு நாள் மட்டும் 45 கப்பல்கள் கடந்து சென்றதாயும் 'போர்ட் செட்' தகவல் கூறுகிறது.

# ஜனசக்தி

தினஇதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

ஆசிரியர் குழு :
எம். ஆர். வெங்கட்ராமன், பி. ராம மூர்த்தி, எஸ். ராமகிருஷ்ணன், கே. முத்தையா நிர்வாகஆசிரியர்.

வியாழன் 11—10—56


## சென்னை சர்க்காரின் உணவுக் கொள்கை

உணவு விலை நாளுக்கு நாள் அதிகரித்து மக்களைப் பெரும் கஷ்டத்தில் ஆழ்த்திவருகிறது. இதற்கு முக்கியமான காரணங்களில் ஒன்று பதுக்கல் வியாபாரிகளுக்கு பாங்குகள் கடன்உதவி செய்வது என்பதை நேற்றுக் குறிப்பிட்டோம்.

மத்திய நிதி மந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் உணவு விஷயத்தில் சில 'கேந்திர' கட்டுப்பாடுகள் கொண்டு வருவது அவசியமென்றார். இதைச் சென்னை சர்க்கார் ஏற்கவில்லை என்ற செய்தி நேற்று வெளியாகியுள்ளது.

'கண்டிரோல்' என்றதுமே சென்னை சர்க்காருக்கு தேர்தல் தான் ஞாபகம் வருகிறது. மக்களுக்கு உணவு கிடைக்கச் செய்வதின் அவசியத்தைப் பற்றி சென்னை சர்க்காருக்குக் கவலை இல்லை. தேர்தலுக்கு முன்பு 'உணவுக் கட்டுப்பாடு' கொண்டு வந்தால் பணக்கார விவசாயிகள், நிலப்பிரபுக்களின் ஓட்டுகள் தங்களுக்கு கிடைக்காமல் போகுமோ என்று சென்னை சர்க்கார் அஞ்சுகிறது.

தேர்தலில் ஓட்டு வாங்குவதை விட மக்களின் உயிரைப் பாதுகாப்பது முக்கியம் என்பதைச் சென்னை சர்க்கார் உணராவிட்டால் நாட்டில் பெரும் கொந்தளிப்புத்தான் ஏற்படும் என எச்சரிக்கிறோம். நிலைமை அந்த அளவு மோசமாகி வருகிறது.

சென்னை ராஜ்யத்தின் உணவுப் பற்றாக்குறை 2½ லட்சம் டன். இது வெளியிலிருந்து கிடைத்துவிட்டால் உணவுக் 'கட்டுப்பாடு' 'கொள் முதல்' தேவை இல்லை என்பது சென்னை சர்க்காரின் வாதம்.

இந்த வாதம் சுத்த அபத்தமானது. முதலில் இங்கு விளைகிற தான்யமே மக்களுக்குக் கிடைக்கவில்லை. பதுக்கல் வியாபாரிகளின் கிடங்குகளிலும், நிலப்பிரபுக்களின் 'அம்பாரங்'களிலும் ஒளிந்து விடுகின்றன. இந்த நிலைமையில் 2½ லட்சமல்ல, 20 லட்சம் டன் இறக்குமதி செய்தாலும் போதாது.

இந்த ராஜ்யத்தின் 2½ லட்சம் டன் பற்றாக்குறை சமாளிக்க முடியாத ஒரு பெரும்குறை அல்ல. இந்த ராஜ்யத்தின் மொத்த உணவு விளைச்சல் 43 லட்சம் டன்னில் இது மிக மிகச் சிறியதொரு பகுதி. நிலப்பிரபுகளிடமுள்ள உபரித் தான்யம் திருட்டு வியாபாரத்திற்குப் போகாமல் தடுத்தால் சகல மக்களுக்கும் நியாயமான விலையில் உணவு கிடைக்கும்படி செய்யமுடியும்.

சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவர் தோழர் ராமமூர்த்தி வற்புறுத்தியதுபோல, தஞ்சை போன்ற நஞ்சைப்பிரதேசத்தில் 2 வேலிக்குமேல் நிலம் வைத்துள்ள நிலச்சுவான்தார்களின் உபரித் தான்யத்தைக் கொள்முதல்செய்வது ஒன்றுதான் இன்றையபயங்கர நிலமையைச் சமாளிக்கும் வழி. இவ்விதம் கொள்முதல் செய்து நியாய விலைக் கடைகள்மூலமும் வினியோகிக்க வேண்டும். உணவு வியாபாரச் சூதாடிகளுக்கு பாங்குகள் கடன் தருவதைத் தடுக்கவேண்டும். இதுவே இன்றையபயங்கர நிலைமைக் மேலும் மோசமாகாமல் தடுக்கும்.

தேர்தலை மனதில் கொண்டு இந்த உடனடி நடவடிக்கைகளை சர்க்கார் எடுக்கத் தயங்குமானால், இதே தேர்தலில் இதே காரணத்திற்காக உணவு விலை உயர்வால் பாதிக்கப்படும் மக்கள் அனைவரும் ஆளும் கட்சிக்கு நல்ல பதிலடி தருவார்கள் என்பதை மறந்துவிட வேண்டாம்.

# உள்நாட்டு விவகாரங்களில் தலையீடா?

## தனியார் துறைக்கு வக்காலத்து

### உலக பாங்க் தலைவர் அறிக்கை

புது டெல்லி, அக். 11—

**இந்தியாவின் உள்விவகாரங்களில் தலையிட்டு, சர்க்காரின் பொருளாதாரக் கொள்கைகளின்மீது நிபந்தனைகள் விதிக்கும்வகையில் விமர்சனம் செய்திருக்கிறார் உலக பாங்க் தலைவர் திரு. பிளேக். அஸ்வான் அணைக்கு உதவி மறுத்து எகிப்தின் பொருளாதாரத்தில் முட்டுக்கட்டைகள் போட்டதைப்போல கன ரகத் தொழில்களுக்கும், சர்க்கார் துறைக்கும் முக்கியத்துவம் கொடுக்கும் திட்டங்களை முறியடிக்கவே இந்தப் பணநாயகத்தின் பாசவலை வீசப்படுகிறது என்று விபரந் தெரிந்த வட்டாரங்கள் கூறுகின்றன.**

இந்தியாவின் இரண்டாம் ஐந்தாண்டுத்திட்டத்திற்கு உலகபாங்க் திட்டவட்டமாக எத்தனை தொகை கடனாக அளிக்கும் என்பது நிர்ணயமாகக் கூறமுடியாது என் கருத்துடன் உலக பாங்க் தலைவர் திரு. பிளேக் இந்திய நிதி மந்திரிக்கு எழுதிய கடிதமொன்று இங்கிலாந்தின் ஏகபோக பெருமுதலாளிகளின் பத்திரிகையான லண்டன் பைனான்ஷியல் டைம்ஸ் பத்திரிகையில் வெளியிடப்பட்டிருக்கிறது.

உங்கள் சர்க்கார் அனுசரித்து வரும் பொருளாதாரக் கொள்கைகளைக் கணக்கிலெடுத்துக் கொண்டும், பொருளாதார நிலைமை, அதன் வருங்காலம் இவற்றின் வெளிச்சத்தில்தான் இனி கொடுக்கப் போகும் கடனின் அளவையும் காலத்தையும் நிர்ணயிப்போம் என்று அவர் எழுதியுள்ளார்.

பொருளாதாரக் கொள்கை என்று குறிப்பிடும் இடத்தில் பிளேக் இந்தியா சர்க்கார் பொருளாதாரக் கொள்கை பற்றி விமர்சனம் செய்கிறார்.

நோட்டுகளை அடித்துவிட்டு பணவீக்கத்தை ஏற்படுத்துவது, பேராசை மிகுந்த திட்டங்களை நிறைவேற்ற எண்ணுவது, உள்நாட்டு வெளிநாட்டு முதலாளிகள் விஷயத்தில் மிதமான கண்ணோட்டம் வேண்டும் என்று இக்கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார்.

இந்தியாவின்பொருளாதார அபிவிருத்தியில் குறிப்பாக யந்திரத் தொழில் துறையில் சுதேசி விதேசி முதலாளிகளின் தனியார் துறைக்கு அதிகமான உற்சாகம் அளிக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறார். இந்த முக்கியத்துவத்தை இந்திய சர்க்கார் குறைத்துக் கணக்கிட்டிருப்பதாயும், அனவசியமான கட்டுப்பாடுகளைப் புகுத்தியிருப்பதாயும் புகார் செய்கிறார்.

சர்க்கார் துறையைப்பொறுத்தவரை அது மிகப்பெரிய அளவில் திட்டமிடப்பட்டிருக்கிறதென்றும் ஐந்தாண்டுக்குள் பூர்த்திசெய்ய முடியாது என்றும் கூறுகிறார்.

வெளிநாட்டுச் செலாவணியை சம்பாதிக்கத் திட்டம் வேண்டுமென்பதை உலக பாங்கு வற்புறுத்துவதாகக் குறிப்பிட்டார்.

கடந்த ஆறாண்டுகளாக மொத்தக் கடனாக உலக பாங்கு 12 கோடி 50 லட்சம் டாலர் அனுமதித்திருக்கிறது. வாஸ்தவத்தில் கிடைத்துள்ள கடன் 6 கோடி 40 லட்சம் டாலர். கடன் வாங்க முயற்சி செய்ததே வெளி நாடுகளிலிருந்து வாங்கும் யந்திர தளவாடங்களுக்கு வெளிநாட்டுச் செலாவணி வேண்டும் என்ற காரணத்தால்.

ஆனால் பிளேக்கின் அறிக்கை குதிரை கிழே விழுந்ததுமன்றிக் குழியும் பறித்ததாம் என்ற போக்கில் அந்நியச் செலாவணிச் செலவுகளுக்கு உதவுவது ஒருபுறமிருக்க அந்நிய செலாவணி சம்பாதிக்க உபதேசம் செய்கிறது. உள் விவகாரங்களில் தலையிடுகிறது என்பதே டெல்லி வட்டாரங்களில் பரவலாகக் கேள்விப்படும் அபிப்பிராயமாக இருக்கிறது என்று தெரிய வருகிறது.

## சங்கரலிங்க நாடார் மதுரை ஆஸ்பத்திரியில்

மதுரை, அக். 11—

76 நாட்களாக உண்ணாவிரதமிருந்துவந்த விருதுநகர் சங்கரலிங்கனாரின் நிலைமை அபாயகரமாகிவிட்டதால், போலீஸார் அவரை போலீஸ் லாரியில் பலவந்தமாகத் தூக்கிக்கொண்டு போய் மதுரை ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறார்கள்.

## கே. வி. கே. சாமி கொலை வழக்கு

### 2-வது அப்ரூவர்

ஸ்ரீவைகுண்டம், அக். 11—

தூத்துக்குடி தி. மு. க. பிரமுகர் கே. வி. கே. சாமி கொலை சம்பந்தமாக கைதுசெய்யப்பட்டவர்களில், வெங்கடாசலம் என்பவர் ஒப்புதல் வாக்குமூலம் கொடுத்தார்.

ஸ்ரீவைகுண்டம் சப் மாஜிஸ்ட்ரேட்முன், கொலை விபரங்களை நேற்று கூறினார்.

ஏற்கெனவே சித்ரவேலு தேவர் என்பவர் ஒப்புதல் வாக்குமூலம் கொடுத்திருக்கிறார்.

## ஆறுமுகம் கொலை வழக்கு

### ஏசுராஜா ஒப்புதல்

கோவில்பட்டி, அக். 10—

தூத்துக்குடி டேவிஸ்புரம் கிராமாதிகாரி தோழர் ஆறுமுகம் கொலைவழக்கில் கைதுசெய்யப்பட்ட ஏசுராஜா இன்று கோவில்பட்டி சப் மாஜிஸ்ட்ரேட்முன் ஒப்புதல் வாக்குமூலம் கொடுத்தார்.

## ஆங்கிலத்திற்கும் ஹிந்திக்கும் ஆட்சி மொழியாக சம அந்தஸ்து

### ராஜாஜியின் கருத்து

சென்னை, அக். 11—

ஹிந்திக்கும் ஆங்கிலத்திற்கும் மத்திய சர்க்காரின்நிர்வாக மொழிகளாக சம அந்தஸ்து அளிக்காமல், இப்பொழுதோ, இன்னும் ஐந்து அல்லது பத்தாண்டுகளுக்குள்ளோ ஹிந்தியை மட்டும் ஆட்சி மொழியாக்குவது நியாயமல்ல, அது கொடுங்கோன்மையாகும் என்று நேற்று மாலை மவுண்ட் ரோடிலுள்ள அரசாங்க ஆர்ட்ஸ் கல்லூரி மாணவர் சங்கத்தில் பேசும்பொழுது ராஜாஜி கூறினார்.

தாய் மொழியிலேயே இலக்கிய சரித்திர பாடங்கள் தொழில் நுட்பக் கல்வி இவற்றைப் பள்ளிக்கூடங்களில் போதிக்க வேண்டும் எனவும் வலியுறுத்தினார்.

இந்தியாவிலுள்ள பெரும்பாலான மக்கள் ஹிந்தி மொழியையோ அதைத் தழுவிய மொழிகளையோ பேசுகிறார்கள் என்றும் எனவே அது தேசிய மொழியாகியுள்ளது என்பதையும் குறிப்பிட்டார்.

சுவிட்ஜர்லந்து போன்ற நாடுகளில் மூன்று மொழிகள் பேசப்படுவதை ராஜாஜி குறிப்பிட்டார்.

ஒவ்வொரு ராஜ்யத்திலும் அங்கு வழங்கும் மொழியே ராஜ்ய மொழியாக இருக்க வேண்டும் என்று குறிப்பிட்ட ராஜாஜி, ராஜ்யங்களிடையிலும், ராஜ்ய சர்க்காருக்கும் மத்திய சர்க்காருக்குமிடையில் இயங்கவேண்டிய மொழி ஆங்கிலமோ ஹிந்தியோதான் என்றும் ஹிந்தியைமட்டும் திணிப்பது கொடுங்கோன்மையின்பாற்படும் என்றும் கூறினார்

ஆங்கிலம் ஹிந்தி இரண்டும் ஆட்சி மொழிகளாக இருந்தால், ஹிந்தி மட்டும் இருந்தால் பாதிக்கப்படும் மக்களுக்கும் நியாயம் செய்ததாகும் என்றார்.

## நேருவுக்கும் ராஜாஜிக்கும் . . .

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

டுமானாலும் கண்டிக்கலாம். ஆனால் கை தூக்கும்போது மாத்திரம் சர்க்கார் கொள்கைக்கே கை தூக்க வேண்டும். இதுதான் ராஜாஜி விரும்பும் எதிர்க்கட்சி என்று விளக்கினார்.

### எங்கள் எதிர்க்கட்சி

"ஆனால் கம்யூனிஸ்டுகளாகிய எங்கள் எதிர்க்கட்சி அடிப்பட்டதல்ல. சர்க்காரின் தவறான கொள்கைகளை சட்டசபையில் எதிர்த்துப் பேசும்; பேச்சுப்படி எதிர்த்து ஓட்டளிக்கும்; கண்டித்து வெளிநடத்தம் செய்யும்; அப்படியும் திருந்தாவிட்டால், அந்த ஆட்சியாளர்களை வெளியேற்றவும் பாடுபடும். அதே சமயத்தில், மக்களிடம் நேரில் வந்து அவர்களது குறைகளைக் கேட்கும். அவர்களது போராட்டத்தில் முன்நிற்கும். அவசியமானால் உயிர்த்தியாகம் உட்பட சகல தியாகங்களும் செய்யும்; இதுதான் எங்கள் எதிர்க்கட்சி" என்று ஆரவாரத்திடையே பேசினார் ஏ. கே. ஜி.

### நேருவின் நொண்டி வாதம்

ஏ. கே. ஜி. தொடர்ந்து பேசுகையில், "பிரதமர் நேரு, எதிர்க்கட்சிகளையெல்லாம் நொண்டிகள் என்றும், காங்கிரஸ்மட்டும் நல்ல மனிதன் என்றும் பேசுகிறார். ஆம்! போன தேர்தலின்போது, தேசத்துரோகிகள் என்று எந்த வகுப்புவாத அகாலிகளைப் பார்த்துச் சொன்னாரோ, அதே அகாலிகளை, இன்று காங்கிரஸில் சேர அழைக்கிறார்; வகுப்புவாத ஸ்தாபனத்தை விட்டுவிட்டு வருமாறு கூட கேட்கவில்லை. இப்படிப்பட்ட வகுப்புவாதிகளையும், ஜமீன்தார்களையும் ஜாகிர்தார்களையும், பதுக்கல்காரர்களையும் காங்கிரசுக்குள் சேர்த்துக்கொண்டுள்ள காங்கிரஸை, நல்ல மனிதன் என்கிறார். காங்கிரசின் ஜன விரோதக் கொள்கைகளை எதிர்த்து சட்டசபைக்குள்ளும் வெளியிலும் போராடிக்கொண்டிருக்கும் கம்யூனிஸ்ட், பி. சோ. களை நொண்டிகள் என்கிறார். இந்த காங்கிரஸின் அழகுதான் என்னே! கம்பீரம்தான் என்னே!" என்று சிரிப்பொலிகளிடையே கிண்டல் செய்தார்.

### யார் பலாத்காரவாதி?

ஏ. கே. ஜி. மேலும் பேசுகையில், "நேரு எங்களை பலாத்காரவாதிகள் என்கிறார். ஆனால் துப்பாக்கிப் பிரயோகங்கள் நடைபெற்ற பல இடங்களில் விசாரணை நடத்தியபோது, போலீஸ் தான் அத்துமீறி நடந்து கொண்டிருக்கிறது என்றும், சுடவேண்டிய நியாயமோ அவசியமோ இல்லையென்றும், சர்க்காரின் ஒரு பகுதியான நீதிபதிகளே தீர்ப்புக் கூறியிருக்கிறார்கள்" என்றார். ஆரவாரம்)

"பம்பாய் மக்களை சமூக விரோதிகள் என்றார் நேரு. குஜராத் மாணவர்களை குரங்குகள், பைத்தியங்கள் என்றார். இன்னும் காங்கிரஸ் ஆட்சி நீடித்தால் இந்தியா முழுவதுமே சமூக விரோதிகளாகிவிடும். காரணம் காங்கிரஸின் 9 வருட துர் ஆட்சி" என்று கண்டித்தார்.

மார்க்ஸிஸத்தை ரஷ்யா தன் வழியிலும், சீனா தன் வழியிலும் அமுல்நடத்தி சமூக மாறுதல் கொண்டு வந்தது. அதேபோல நாங்கள் இந்திய நாட்டின் பரம்பரை, அபிலாஷைகள், ஆகிவற்றுக்கு ஏற்ப, சமூக மாறுதலைக் கொண்டு வருவோம்" என்றார். பலத்த ஆரவாரம், நீண்ட நேரம் நீடித்தது.

## சேலம் தொழிலாளி கொலை எதிரொலி

### ஒருவர் கைது

சேலம், அக். 9—

சேலம் மாக்னசைட் தொழிலாளி ஸ்ரீ சி. பெருமாள் கொலையுண்டது சம்பந்தமாக பழனிசாமி என்பவர் கைதுசெய்யப்பட்டிருக்கிறார்.

## அலையோசை

ஜாப். பிரதமர் மாஸ்கோ பயணம்.

—செய்தி.

நடக்காத நிகழ்ச்சியெல்லாம் நடந்ததடி அம்மானை என்று தமது நரித்தனம் நாசமாகிவிட்டது பற்றி ஒப்பாரி வைக்கின்றன டாலர் ஓநாய்கள்.

* * *

திரு-கொச்சியில் சுவரில்லாச் சிறை —செய்தித் தலைப்பு

திரு-கொச்சியில் என்ன, திரு-கொச்சி மலபார் ஜில்லா உள்ளிட்ட கேரள ராஜ்யமே இன்று சுவரில்லாச் சிறைதான். இல்லாவிட்டால் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கையில் அதிகாரத்தை ஒப்படைக்காமல் ஜனாதிபதி ஆட்சி என்று ஆலோசகர் ஆட்சியைத் திணிப்பானேன்? என்று கோபாவேசத்துடன் கேட்கிறார் பிரஜா உரிமை இயக்கத் தொண்டர்.

* * *

"போட்டி யூனியன்களால் தொழிலாளர் நலனுக்கே பாதகம்".

—மந்திரி பக்தவத்சலம் பேச்சு.

எப்பொழுது இந்த ஞானோதயம் வந்தது? ஐ. என். டி. யூ. சி. சங்கங்களுக்கு விசேஷ சலுகை காட்டிச் சென்றவிடமெல்லாம் ஸ்தாபிக்க முயன்றபோது அது போட்டிச் சங்கமாகத் தெரியவில்லையா? என்று கேட்கிறார் தொழிற்சங்க ஒற்றுமைவாதி.

* * *

அரிசி விலையைக் கட்டுப்படுத்த சர்க்கார் நடவடிக்கைகள் பலனளித்துவிட்டதாக அதிகாரிகள் கருதுகின்றனர்.

மித்திரன் தலைப்பு.

யாருக்குப் பயனளித்துவிட்டது? பதுக்கல்காரருக்கா? கள்ளமார்க்கெட் கழுகுகளுக்கா? விலைவாசி உயர்வால் விழி பிதுங்கிவிட்ட ஏழை நடுத்தர மக்களுக்கா என்று குடைகிறார் ஏமாற்றமடைந்துள்ள நடுத்தர சிப்பந்தி.

* * *

குடும்பக் கட்டுப்பாடு டெல்லி உதவியை ஏற்க பம்பாய் மறுப்பு.

—செய்தித் தலைப்பு.

எங்கள் குடும்ப உள்விவகாரத்தில் உன் தலையீடு என்ன? என்ற காரணத்தினாலா? இந்த கட்டுப்பாட்டுக் கலை கவைக்குதவாது என்ற நம்பிக்கையாலா? என்கிறார் ஐந்து பெண் பெற்று ஆண்டியாகிவிட்ட குடும்பஸ்தர்.

* * *

சமூகத்தை அதிரவைக்காமல் இந்தியாவில் நடக்கும் புரட்சி. நேருவின் பெருமிதம்.

—தினமணி செய்தி தலைப்பு.

சமூகத்தை அதிரவைக்காமலிருக்க மக்களின் மண்டைகளைப் பதம் பார்த்த குண்டாந்தடிகள், மார்பில் பாய்ந்த துப்பாக்கி குண்டுகள் மூச்சையடைத்த கண்ணீர்ப்புகைகள், சிறைகளை நிரப்பிய அடக்குமுறைகள் எல்லாம் எந்த சமூகத்தையும் அதிரவைக்கவில்லையா? பண்டிதரே! என்று பாமரன் ஒருவன் கேட்கிறான்.

## இந்தியாவுடன் இணைவது பற்றி ஊர்ஜிதம்

### காஷ்மீர் சட்டசபை முடிவுகள்

ஸ்ரீநகர், அக். 11—

நேற்று காஷ்மீர் அரசியல் நிர்ணய சபையில் பிரேரேபிக்கப்பட்ட நகல் அரசியலமைப்பு காஷ்மீர் இந்தியாவுடன் இணைவது சம்பந்தமாக ஊர்ஜிதம் செய்தது. இந்த முடிவை மாற்றக்கூடிய எத்தகைய மசோதாவும் ராஜ்ய சட்டசபையில் புகுத்தக்கூடாது என்றும் இந்த நகல் திட்டவட்டமாக வகுத்துக் கூறியுள்ளது.

நீதி, சுதந்திரம், சமத்துவம் சகோதரத்துவம் இக் கோட்பாடுகளின் அடிப்படையில் ஜம்முவும் காஷ்மீரும் இந்தியாவின் பகுதிகளாகும் என்கிறது இந்த நகல். காஷ்மீர் வரலாற்றில் ஒரு மைல் கல் என்று இதை பிரதமர் பக்ஷி குலாம்

# தங்கச் சுரங்க முதலாளிக்கு நஷ்டஈடு அதிகம் கொடுப்பதேன்?

## சர்வகட்சிக் கமிட்டி கண்டனம்

ராபர்ஸன்பேட்டை, அக். 10—

அக். 4ந்தேதி சனிக்கிழமை இரவு 7 மணிக்கு ராபர்ட்ஸன் பேட்டை கே டாக்கீஸ் ஆபிசில் கோலார் தங்கச் சுரங்கங்களை தேசியமயமாக்க கோரும் சர்வ கட்சி கமிட்டியின் கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீ. பி. என். ராமசாமி ஐயர் தலைமை வகித்தார். தேசியமயக் கமிட்டிக் காரியதரிசி தோழர் கே. எஸ். வாசன் எம். எல்.ஏ. கோலார் தங்கச் சுரங்கங்களை தேசியமயமாக்கும் மைசூர் சர்க்காரின் மசோதாவை விளக்கிக் கூறினர்.

கோலார் தங்கச் சுரங்கங்களை நஷ்டஈடின்றி தேசியமயமாக்க வேண்டுமென தங்கவயல் தேசியமயக் கமிட்டி கோரி வந்துள்ளது. மைசூர் சர்க்கார் 86 லட்சம் ரூபாய் நஷ்டஈடு தர பேரம் பேசி வந்தனர். ஆனால் இந்திய சர்க்கார் அதில் தலையிட்டு ரூ. 164 லட்சம் நஷ்டஈடு கொடுக்கப்பட வேண்டுமென மைசூர் சர்க்காரை நிர்ப்பந்தித்துள்ளது. மைசூர் சர்க்கார் இந்திய சர்க்காருக்குப் பணிந்து ரூ. 164 லட்சம் நஷ்டஈடு தர முன் வந்துள்ளதை இக்கமிட்டி கண்டித்தது.

பிரிட்டிஷ் ஆபீஸர்களுக்குக் கொடுக்கப் போகும் நஷ்டஈடும், பிராவிடெண்டு பண்டு போன்றவை, பிரிட்டிஷ் கம்பனிக்குக் கொடுக்கப்போகும் ரூ. 164 லட்சத்திலிருந்தே கொடுத்தாக வேண்டும் எனவும், தங்கச் சுரங்கங்கள் தேசிய மயமாக்கப்பட்டபின் தங்கச் சுரங்கங்களில் வேலை செய்யும் ஆபீஸர்கள், இதரத் தொழிலாளிகளின் சம்பளங்கள், வேலை போன்றவற்றை சர்க்கார் விரும்பும் முறையில் மாற்றியமைக்கப்படும் என்று மசோதாவிலுள்ளதை எடுத்துவிடவேண்டும் எனவும் தீர்மானம் நிறைவேற்றியது.

மசோதாவைப் பற்றிய திருத்தங்களடங்கிய ஒரு யாதாஸ்தை திரு. பி. என். ராமசாமி ஐயர், கே. எஸ். வாசன், எம். சி. நரசிம்மன், கே. பி. திம்மய்யாப் போன்ளோர், தயாரிப்பதெனவும், மைசூர் சட்டசபையில் கே. எஸ். வாசன் எம். எல். ஏ. அதைப் பிரேரிக்க வேண்டும் எனவும் கமிட்டிக் கேட்டுக் கொண்டது.

கடந்த 70 ஆண்டுகளுக்கு மேலாக தங்கச் சுரங்கங்களின் லாபத்தைக் கொள்ளைக் கொண்டு போயிருந்த பிரிட்டிஷ் கம்பனியிடமிருந்து தங்கச் சுரங்கங்களை தேச உடமையாக்க முன் வந்துள்ள மைசூர் சர்க்காரையும், அந்த இயக்கத்தில் முன்னணியிலிருந்து வந்துள்ள தங்கவயல் தொழிலாளிகளையும் பொதுமக்களையும், யும், தேசியமயக் கமிட்டிப் பாராட்டுகிறது என்ற தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

தேசிய மயக்கமிட்டியில் திரு. பி. என். ராமசாமி ஐயர் ஏ. டி. வி. செல்லம் (கே. ஜி. எப். சானிடரி போர்டு) எம். சி. பெருமாள் எம். கே. பந்தாயில் எஸ். ஓ. பாக்கியநாதன் (காங்கிரஸ்) எஸ். ஐ. அருள்தாஸன் (ஆசிரியர் 'ஜனநாயகம்') ஜே. சி. ஆதிமூலம் (எஸ்.சி.எப்.) பி. சரவணம் (தி.க.), கே. பி. திம்மய்யா (ஐ. என். டி. யு. சி.) எஸ். சவரிதாஸ், கே. எஸ். வாசன் எம்.எல்.ஏ. எம். சி. நரசிம்மன், ஆர். கிருஷ்ணன் (கம்யூனிஸ்ட்கள்) கலந்துக்கொண்டனர். (ந. நி.)

### விற்பனை வரி பற்றி குடந்தை வர்த்தகர் சங்கம்

கும்பகோணம், அக். 10—

கும்பகோணம் நகர வர்த்தகர் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் அக். 7-ந் தேதி ஞாயிறு காலை தலைவர் திரு. கே. ஆர். எம். எஸ். சொக்கலிங்கம் செட்டியார் தலைமையில் நடைபெற்றது.

விற்பனை வரி விதிப்பில் சிறு வர்த்தகர்களும் நியாயம் பெறும் வகையில் அப்பலேட்ரிப்யூனலின் சின்ஸ்டிடியூஷன் கட்டணத்தை ரூ. 5 ஆகக் குறைத்து மேற்படி ட்ரிப்யூனலை இயங்கும் கோர்ட்டாக மாற்றி, அப்பீல்களை சம்பந்தப்பட்ட தாலூக்கா, அல்லது ஜில்லா தலை நகர்களில் விசாரித்து நீதி வழங்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும், வருட விற்பனை ரூ. 20000-க்கு மேற்பட்ட வர்த்தகர்களும் வரித்தொகையை விற்பனை வரி ஆபீஸிலேயே செலுத்த அனுமதி கோரியும், சிறு வர்த்தகர்கள், தம் வர்த்தகத்தை அபிவிருத்தி செய்வதற்கு உதவியாக, எவ்வித சொத்து ஜாமீனுமில்லாமல் சொந்த ஜாமீன் பேரில் ரூ. 2000 வரை ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா மூலமும், கோ ஆப்ரேடிவ் அர்பன் பேங்க்மூலமும் கடனுதவிசெய்யும்படி முறையே மத்திய, ராஜ்ய சர்க்கார்களைக் கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### ஆசிரமத் தொழிலாளர் உண்ணுவிரதம்

புதுவை, ஆக. 9—

6வது நாளான இன்றும் ஆசிரமத் தொழிலாளர் அறுவரின் உண்ணுவிரதப் போர் நீடிக்கிறது. இந்த உண்ணு விரதத்தை காண தினசரி நகரிலிருந்தும், கிராமப் புறங்களிலிருந்தும் ஏராளமான பொது மக்கள் வருகிறார்கள். ஆசிரம—அரசாங்க தரப்பிலிருந்து எவ்வித முயற்சியும் எடுக்கப்படவில்லை. நேற்று பாரதி மில் தொழிலாளர் ஆர்ப்பாட்ட ஊர்வலம் ஒன்று நடைபெற்றது. புதுவை வர்த்தக குமாஸ்தாக்கள் சங்கம், மூட்டைத் தூக்கும் தொழிலாளர் சங்கம், புதுவை ராஜ்ய மாதர் சங்கம்—குருசுகுப்பம் கிளை ஆகிய ஸ்தாபனங்கள் அரசாங்கமும், ஆசிரம நிர்வாகமும் தீர்த்துவைக்குமாறு துண்டு பிரசுரங்கள் வெளியிட்டுள்ளன.

### அஜீஸ்—நாசர் தந்திகள்

கொளும்பு, அக். 10—

"பிரிட்டிஷ் அரசாங்கம் எகிப்தைத் தாக்குமேயானால், இலங்கையிலுள்ள ஜனநாயக தொழிலாளர் காங்கிரஸைச் சேர்ந்த ஒருலக்ஷத்து 40 ஆயிரம் அங்கத்தினர்களும், பிரிட்டிஷாருக்குச் சொந்தமாக இலங்கையிலுள்ள சகல ரப்பர் தோட்டங்களிலும் நடவடிக்கை எடுப்போம்" என்று ஜ. தொ. கா. தலைவர் ஜனாப் ஏ. அஜீஸ் அவர்கள், எகிப்திய ஜனாதிபதி நாஸருக்கு தந்தியடித்தார்.

அதற்கு நன்றி கூறி, நாஸர் அனுப்பிய பதில் தந்தியில், "ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் ஒற்றுமைக்கும் நட்புறவுக்கும் இஃதோர் சின்னமாகும்" என்று தெரிவித்துள்ளார். (ந. நி.)

# ஹைதராபாத் தங்கச் சுரங்கத்தில் 24 நாட்களாக ஸ்ட்ரைக்

## உடனே உதவுங்கள்!

ஹட்டி, அக். 3—

"ஹைதராபாத் ரெய்ச்சூர் டிவிஷனில் உள்ள ஹட்டி தங்கச் சுரங்கத்தில் வேலை செய்பவர்கள் பெரும்பாலும் தமிழ்நாடு, கோலார், மலபார் ஆகிய பிரதேசங்களைச் சேர்ந்தவர்கள்.

அவர்கள், அடிப்படைச் சம்பளத்தை உயர்த்த வேண்டுமென்றும், பஞ்சப்படி, போனஸ், கிராஜுடி, சங்க அங்கீகாரம், இடைக்கால நிவாரணம் முதலிய கோரிக்கைகளுக்காகவும் செப். 17 தேதி முதல் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள். சுரங்க நிர்வாகம் அடம்பிடிக்கிறது. சர்க்கார் கல்லுப்பிள்ளையாராகிவிட்டது. பசி பட்டினியுடன் பொறுக்கமுடியாத வேதனையுடன் தொழிலாளர்கள் வேலைநிறுத்தப் போராட்டத்தை நீடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த நிலைமையில் இந்தியா முழுவதிலுமுள்ள தொழிலாள சகோதரர்கள் உடனே பணமும் ஆசியும் அனுப்பி உதவிபுரிய வேண்டும்" என்று அ. இ. தொ. சங்க காங்கிரஸ் காரியதரிசியும் அகில ஹைதராபாத் தொழிற் சங்க தலைவருமான மக்தூம் மொய்தீன் எம்.எல்.ஏ., அகில ஹைதராபாத் தொழிற்சங்க காங்கிரஸ் காரியதரிசியும், தங்கச் சுரங்கத் தொழிலாளர் சங்க காரியதரிசியுமான தோழர் பி. நாராயணனும் உருக்கமான அறிக்கை வெளியிட்டுள்ளார்கள். பணம் அனுப்புவோர்:

பி. நாராயணன்,

காரியதரிசி, ஹைதராபாத் தங்கச் சுரங்கம், ஹட்டி (Hutti, Raichur, (Dn)

என்ற விலாசத்துக்கு அனுப்பவும்.

### உண்ணுவிரத தியாகி—ம.பொ.சியின் உருக்கமான சந்திப்பு!

விருதுநகர், அக். 9—

இன்று காலை தமிழரசுக் கழகத் தலைவர் திரு. ம. பொ. சிவஞானம் சாகும் நிலைமையிலிருக்கும் உண்ணுவிரத தியாகி திரு. க.பெ.சங்கரலிங்க நாடாரை கண்டார்.

விரதத்தை முடித்துக் கொண்டு மக்களின் ஆதரவைதேடி போராட்டத்தில் இறங்கும்படி ம. பொ. சி. கேட்டுக் கொண்டார்.

ஆனால் தியாகிபால் பேசமுடியவில்லை. அவர், ம. பொ. சி. இரு கைகளையும் பிடித்துக்கொண்டு கண்ணீர் வடித்தார். ம. பொ. சி. மனமுருகி, கண்கலங்கினர். பிறகு மலர்மாலையை தியாகியின் பாதங்களில் இட்டு வணங்கிச் சென்றார். ஏராளமான பேர்கள் இந்த உருக்கமான நிகழ்ச்சியைப் பார்த்து மனம் உருகினர்.

இதுபற்றி ம. பொ. சி. அறிவித்தபோது:—

நான் கொடுத்துவைக்காதவன். முதலிலேயே அவரை வந்து சந்திக்காதுபோனேன். இப்பொழுது அவரால் பேச முடியவில்லை. இந்த காங்கிரஸ் ஆட்சியில் இதுபோன்ற உத்தமர்கள் உயிர் ஊசலாடி பலியான பிறகுதான் கோரிக்கைகள் நிறைவேறுமோ? என்றார். (ந. நி.)

### யானைமலையில் கல்லுடைப்போர் சங்கம்

மதுரை, அக். 8—

மதுரை தாலூகா யானைமலை நரசிங்கத்தில், கல்லுடைக்கும் தொழிலாளர்களின் கூட்டம் 30-9-56ல் நடைபெற்றது.

திரு. அழகிரிசாமி நாயுடு தலைமை வகித்தார்.

வெயிலுக்கு இளைப்பாறவும், சாப்பிடுவதற்கு கொட்டகையும், அடிபட்டவர்களுக்கு சிகிச்சை செய்ய வைத்தியவசதியும் வேண்டுமெனவும், சங்கத்தை அ.இ.தொ. சங்க காங்கிரஸுடன் இணைப்பதென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

சங்கத்துக்கு தலைவர் அழகிரிசாமி நாயுடு, உபதலைவர் கே. சப்பாணி, காரியதரிசி வி. டி. மணி, உப காரியதரிசி, வெள்ளைச்சாமி, பொக்கிஷதார் கே. சுப்பன், மற்றும் 10 பேர் கமிட்டி உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். (ந. நி.)

### தூம்பு-ஈக்கி

தூத்துக்குடி, அக். 8—

தும்பு-ஈக்கித் தொழிலாளர்கள் கூலிஉயர்வு சம்பந்தமாக நெல்லை மாவட்ட தொழில் அதிகாரி திரு. ராமச்சந்திரன் முன்பு பேச்சு வார்த்தை நடந்தது. தொழிற்சங்கத்தின் சார்பாக காரியதரிசி எஸ். ஏ. முருகானந்தமும், உப காரியதரிசி எஸ். டி. நாயகமும் கோரிக்கைகளின் நியாயத்தன்மையை எடுத்துக்கூறியும், தொழிலில் நஷ்டம் இல்லை என்றும், தொழில் வளர முதலாளிகளுடன் ஒத்துழைத்து வருவதுபற்றியும் விளக்கிப் பேசினார்கள். முதலாளிகள் சார்பாக முதலாளிகள் சங்கக் காரியதரிசி திரு. பொன்சுப்பையா அவர்களும், திரு. பழனிவேல் நாடார் அவர்களும் கலந்தனர். தங்களுக்கு தொழிலில் உள்ள கஷ்டத்தை கூறினர். பின்பு தொழில் அதிகாரியிடம் இறுதி முடிவை 18உ கூறுவதாக கூறிப் போனார்கள். (ந. நி.)

# சத்திரப்பட்டி தி.மு.க.வின் பித்தலாட்டப் பிரச்சாரம்

தூத்துக்குடி, அக். 11—

துத்துக்குடியில் தி. மு. க. பிரமுகர் கே.வி.கே. சாமி 20-9-56-ல் கொலை செய்யப்பட்டதை யடுத்து 21-9-56 இரவு 12 மணிக்கு இராஜபாளையத்தை யடுத்த சத்திரப் பட்டியில், தி.மு.க. சார்பாக, கம்யூனிஸ்டுகள் மீது பழி போட்டு மெகபோன் செய்தார்கள். 'பொது மக்களே! கொலை, கொள்ளை, கற்பழித்தல் இவையே தொழிலாகக் கொண்ட கம்யூனிஸ்டுகள் படுகொலை செய்துவிட்டதாகவும், பொதுமக்கள் யாரும் வெளியில் தூங்கவேண்டாமென்' றும் ஆத்திரத்தோடு சத்தமிட்டு பிரச்சாரம் செய்தார்கள்.

கொலை சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டிருப்பவர்கள் தி. மு. க.வைச் சேர்ந்தவர்களே என்ற விஷயம் மறுநாள் பத்திரிகைகளில் வந்த பிறகும்கூட, முன்னர் செய்த பிரச்சாரத்துக்கு மறுப்புக் கொடுக்கவில்லை.

கம்யூனிஸ்ட் கட்சியின் வேண்டுகோளின்பேரில், 24-9-56ல் ஊர்க் கூட்டம் நடைபெற்றது. ஊர்ப் பிரமுகர்கள் விசாரணை நடத்தினார்கள். அப்போதும்கூட, தி.மு. க. காரர்கள், தங்களுக்கு தந்தி மூலம் கிடைத்த செய்தியை ஆதாரமாகக்கொண்டேபிரச்சாரம் செய்ததாக வாதாடினார்கள். எங்கே, அந்தத் தந்தியைக் காட்டுங்கள் என்று ஊர் மக்கள் வற்புறுத்தினார்கள். அதற்கு தி. மு. க.காரர்கள், இராஜபாளையத்திலுள்ள தங்கள் தோழர்களிடமிருந்து வாங்கிவந்து காட்டுவதாகவும், ஒரு நாள் அவகாசம் வேண்டுமென்றும் கேட்டார்கள். ஊர் கூட்டம் அனுமதித்தது.

ஆனால் இதுவரை, இந்தா அந்தா என்று சாக்குச் சொல்லிக் கொண்டு, சகதியில் நுழைத்த காலை எடுக்கமுடியாமல் திணறிக் கொண்டிருக்கிறார்கள்.

கம்யூனிஸ்ட் கட்சியைப்பற்றி அபாண்டமான பொய்ச்செய்தி பரப்பியதையும், பின்னர் மறுப்பு கூறாததையும் கண்டு பொதுமக்கள் ஆத்திரமடைந்திருக்கிறார்கள். இதுபற்றி தி. மு. க. பொதுச் செயலாளருக்கு செய்தி அனுப்பியும் இதுவரை பதில் வரவில்லை. (ந. நி.)

### அரிசி படி ரூ. 1

ஒரு நியாயவிலைக் கடை போதாது

மன்னார்குடி, அக். 9—

இங்கு 30,000 மக்கள் உள்ளனர். ஆனால் ஒரேவொரு நியாய விலைக் கடைதானுள்ளது. ஒரு மைல்தூரமிருந்து மக்கள் வர வேண்டி இருக்கிறது. மக்கள் மணிக்கணக்கில் 'கியூ' வரிசையில் நிற்கவேண்டியிருக்கிறது.

உடனடியாக அதிகம் கடைகள் திறக்கவேண்டுமென்று மக்கள் கோருகின்றன.

இங்கு அரிசி பட்டணம் படி ரூ. 1 முதல் ரூ. 1-0-6 வரை விற்கிறது.

# சட்டசபைமுன் மறியல்

## பீடித் தொழிலாளர் தீர்மானம்

வேலூர், அக். 7—

சென்னை சர்க்கார் கடந்த 3 வருட காலமாக பீடித் தொழிலாளருக்கு சட்டம் கொண்டு வருவதாக சொல்லி ஏமாற்றி வருகிறது. 18-8-56-ல் தமிழ்நாடு பீடி, சுருட்டு தொழிலாளர் தூது கோஷ்டி தொழில் மந்திரியிடம் மகஜர் கொடுத்தபோது, செப்டம்பர் மாத சட்டசபைக் கூட்டத்தில் சட்டம் கொண்டு வருவதாக தொழில் மந்திரி பக்தவத்சலம் வாக்குறுதி கொடுத்தார். அதிலும் சட்டம் கொண்டுவராமல் ஏமாற்றி விட்டது.

மறியல்

ஆகவே, அக்டோபர் மாதம் கூடும் சட்டசபைக் கூட்டத்தின் போது வடாற்காடு ஜில்லாவிலிருந்து பீடித் தொழிலாளர்கள் தொண்டர்களைத் திரட்டி சட்ட சபை முன் மறியல் நடத்துவோம் என 29-9-56-ல் இங்கு நடந்த வ. ஆ. ஜில்லா பீடித் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

### தீபாவளி போனஸ்

சேலம், அக். 10—

தீபாவளிக்கு ஒரு மாதச் சம்பளம் போனஸாகத் தரவேண்டுமென்று சேலம் ஆயில், ரைஸ் மில் தொழிலாளர் சங்கம் கிளர்ச்சி செய்து வருகிறது. தோழர் எஸ். எம். ராமய்யா தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள் டி. ஏ. சுப்பையன், முத்து ஆகியோர் பேசினார்கள். (ந. நி.)

### இந்தியாவில் நிலக்கரி உற்பத்தி

புதுடில்லி, அக். 10—

இந்தியாவில் உற்பத்தியான நிலக்கரியின் மொத்த அளவு 1956 ஜூலை மாதத்தில் 31,64,647 டன்னாக இருந்தது. 1956 ஆகஸ்ட் மாதத்தில் 33,07,647 டன்னாக உயர்ந்தது என்று, சுரங்கங்களுக்கான பிரதம இன்ஸ்பெக்டர் வெளியிட்டுள்ள அதிகாரபூர்வமான புள்ளிவிவரங்களிலிருந்து தெரியவருகிறது.

### செங்கோட்டை நகரசபைக் கூட்டம்

செங்கோட்டை, அக். 8—

செங்கோட்டை நகர சபைக் கூட்டம் சென்ற 6ம் தேதி தலைவர் திரு. எம். எஸ். கரையாளர் தலைமையில் நடைபெற்றது. நகரசுத்தி கரிப்பு இயக்கத்திற்கு அனுமதிக்கப்பட்ட ரூ. 99-4-0க்கு மேல் கூடுதலாக அனுமதிக்கக்கூடாது என்று பெரும்பான்மையோர் வாக்களித்தனர். முத்துசுவாமி முனிசிபல் பார்க்கில் சபை அனுமதியின்றி கமிஷனர் வாயிற்படி கட்டிய வகைக்கு ரூ. 10 அனுமதிக்கப்படவில்லை. (ந. நி.)

## நடக்கவிருப்பவை...

ஏ. கே. கோபாலன்

பொன்மலைப் பட்டியில் 12-10-56 மாலை 6-30 மணிக்கு தோழர் ஏ. கே. கோபாலன் எம்.பி. "கம்யூனிஸ்ட் கட்சியும் பொதுத் தேர்தலும்" என்பது பற்றிப் பேசுவார்.

தோழர் எம். கல்யாணசுந்தரம் எம்.எல்.ஏ. தலைமை வகிப்பார்.

காவேரி நகரில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பாக 13-10-56 ந்தேதி ஆயுதபூஜையன்று காலை 8-30 மணிக்கு பொதுக்கூட்டம் நடைபெறும். அதில் தோழர் கே. ஏ. நம்பியார் எம். பி, தோழர் ஆர். உமாநாத் பேசுவார்கள்.

தஞ்சை மாவட்ட பிற்பட்டோர் சங்க அமைப்புக் கூட்டம் புலவர் திரு. வி. பொ. பழனி வேலன் தலைமையில் 14-10-56 காலை 8 மணிக்கு முத்துப் பேட்டையில் நடைபெறும்.

## பிரிட்டன், பிரான்ஸ், எகிப்திடையே
# இரகசிய பேச்சுவார்த்தைகள்!
## நம்பிக்கை ஒளி தென்படுகிறது

நியூயார்க், அக். 9—
பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி செல்வின் லாயிட், பிரெஞ்சு வெளிநாட்டு மந்திரி பினே, எகிப்து வெளிநாட்டு மந்திரி மகமது பாசா ஆகிய மூவரும் இன்று சூயஸ் பிரச்னை பற்றி ஐ. நா. பொதுச் செயலாளர் அலுவலகத்தில் இரகசியப்பேச்சு வார்த்தைகள் நடத்தினர். இந்த இரகசிய சம்பாஷணைகள் முடிவடையும்வரையும், சபைக் கூட்டத்தை 48 மணி நேரத்துக்கு ஒத்திவைக்கும்படி பிரிட்டனும் பிரான்சும் விடுத்த வேண்டுகோளுக்கு இன்று பாதுகாப்பு சபை சம்மதித்தது.

### நம்பிக்கை ஒளி

சூயஸ் விவகாரத்தில் ஒரு சுமுகமான இடைக்கால உடன்பாடு ஏற்படலாம் என்பதற்கான நம்பிக்கையான அறிகுறிகள் தென்படுகின்றன. அநேகமாக பாதுகாப்பு சபை சார்பில் ஒரு பேச்சு வார்த்தைக் குழு சீக்கிரமே அமைக்கப்படலாம் என்று தோன்றுகிறது.

### டல்லசின் நம்பிக்கை

சூயஸ் நெருக்கடிக்கு ஒரு சமாதானப் பூர்வமான பரிகாரம் காண முடியுமென்றே தாம் நம்புவதாக இன்று அமெரிக்க வெளிநாட்டு மந்திரி டல்லஸ் கூறினர்.

பிரிட்டிஷ் பிரெஞ்சு திட்டத்தை யுகோஸ்லவேகிய பிரதிநிதி கண்டித்துப் பேசினர்.

## சைனு பஜார் நடைபாதை வியாபாரிகள் கோரிக்கை

சென்னை, அக். 10—
நேற்று சைனு பஜார் நடைபாதை வியாபாரிகள் சங்கக் கூட்டம் தலைவர் திரு. ஆர். எஸ். குமாரசாமி தலைமையில் நடைபெற்றது.

### தீர்மானங்கள்

சைனுபஜார் நடைபாதை வியாபாரிகளை, போலீஸார் கைது செய்வதுடன், அவர்களின் சரக்கையும் பறிமுதல் செய்துவிடுகிறார்கள். போலீஸார் செய்கை சட்ட விரோதமானது. நடைபாதையில் வியாபாரம் செய்ய சுதந்திர இந்தியாவில் உரிமையுண்டு.

சட்டத்துக்குப் புறம்பாக நடக்கும் அதிகாரிகள் மீது உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டுமென முதலமைச்சர் காமராஜருக்கு இக் கூட்டம் விண்ணப்பம் செய்து கொள்ளுகிறது.

மற்றும், நடைபாதை வியாபாரிகளிடமிருந்து பறிமுதல் செய்த சாமான்களை சர்க்கார் வசம் ஒப்படைக்கப்பட்டதா இல்லையா என்பதையும் உடனடியாக சென்னை சர்க்கார் பரிசீலனை செய்ய வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறது.

## விவசாயத் தொழிலாளர் வெற்றி

ஆரணி, அக். 10—
பொன்னேரி தாலூகா, ஆரணிக்கு அடுத்த மங்களம் கிராமத்தில் 28-9-56ல் நடைபெற்ற விவசாயத் தொழிலாளர் கூலிப் போராட்டம் வெற்றியடைந்தது.

தினக்கூலி 10 அணு போதாதென்றும், 12 அணு வேண்டுமென்றும் கோரி 2 நாள் வேலைக்குப் போகாமல் ஸ்ட்ரைக் செய்தனர்.

அண்ணாமலை செட்டியார் என்ற ஒரு நிலச்சுவான்தார் மட்டும், சங்கத் தலைவரிடம் வந்து 12 அணு கூலி கொடுக்க ஒப்புக்கொண்டார். அவருடைய நிலத்தில் மட்டும் இப்பொழுது வேலை நடக்கிறது.

மற்ற நிலச்சுவான்தார்கள் இன்னும் வழிக்கு வரவில்லை. அவர்கள் நிலங்களில் வேலைசெய்ய வெளியாட்களும் மறுத்துவிட்டனர். (ந-நி.)

## பணம் கட்டியும் ரேடியோ வரவில்லை
### சர்க்கார் இலாகா நிர்வாக லட்சணம்!

வேலூர், அக். 10—
ஸ்ரீவைகுண்டம் தாலூகா வேலூர் பஞ்சாயத்து போர்டு, கிராமத்தில் ஒரு ரேடியோ வைப்பதற்காக சர்க்காரிடம் ரூ. 290 சென்ற 29-2-56ம் தேதி கட்டிற்று. இன்று 8 மாதங்கள் ஆகியும் இன்னும் ரேடியோ வந்தபாடில்லை. பல கடிதங்கள் பஞ்சாயத்து போர்டிலிருந்து எழுதியும் பலனில்லை. அரசாங்க இலாகாவின் இந்த மந்தப்போக்கைப் பற்றி கிராம மக்கள் ரொம்பவும் அதிருப்தியோடு பேசி வருகிறார்கள்.

## தூக்கிலிடாதீர்!

சென்னை, அக். 10—
கேரள பொதுஜன ஊழியர் தோழர் வாசுதேவ பிள்ளை மீதுள்ள தூக்கு தண்டனையை ரத்து செய்யுமாறு ஜனாதிபதிக்கு வ.உ.சி. நகர் மக்கள் முன்னேற்ற சங்கம் தந்தி யடித்துள்ளது.

தூத்துக்குடி சம்பவங்கள்:
## நகரத்திலுள்ள சமூக விரோதிகளைஎதிர்க்க மக்கள் முன்வர கோரிக்கை

தூத்துக்குடி, அக். 8—
நகரத்தில் நடந்த இரு கொலைகள் சமூக விரோதமான காரியங்களில் ஈடுபட்டுள்ளவர்களால் செய்யப்பட்டுள்ளதை மக்களுக்கு எடுத்துக் கூறி, இக்காரியங்களை அடக்க மக்கள் முன்வர வேண்டுமென காங்கிரஸ் தலைவர் திரு. எம். வெங்கிடகிருஷ்ணனும், கம்யூனிஸ்ட் தலைவர் திரு. எஸ். ஏ. முருகானந்தமும், தி. மு. க. தலைவர் எம். எஸ். சிவசாமியும் மக்களிடம் கூறி விளக்கி வருகின்றனர்.

# கேரளத்தில் மாற்று சர்க்கார் அமைக்க நல்ல சூழ்நிலை
## தோழர் ஏ. கே. ஜி. பேட்டி

சென்னை, அக். 10—
பாராளு மன்ற எதிர்க் கட்சித் தலைவர் தோழர் ஏ. கே. கோபாலன் இன்று "ஜனசக்தி" காரியாலயத்திற்கு விஜயம் செய்தார். நமது நிருபருக்கு அளித்த பேட்டியில், புதிய கேரளத்தில் கம்யூனிஸ்டுக் கட்சி 70லிருந்து 75 ஸ்தானங்களுக்குப் போட்டியிடும் என்று கூறினர். புரட்சி சோஷலிஸ்டுக் கட்சி, சுயேச்சையாளர் பலருடன் ஒரு தேர்தல் உடன்பாட்டிற்கு வர முடியுமென்றும், பி. சோ. கட்சியுடன் உடன்பாட்டிற்கு வர அவர்களை வேண்டிக் கொண்டுள்ளதாகவும் கூறினர்.

கேரளத்தில் மக்கள் ஸ்திரமான சர்க்கார் அமையவேண்டுமென்று விரும்புகிறார்களென்றும், இடதுசாரிக் கட்சிகளுக்கு அங்கு மாற்று சர்க்கார் அமைக்க நல்ல சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறதென்றும் கூறினர்.

கேரளமெங்கும் காங்கிரஸ் ஆட்சியின் மேல் பெரும் அதிருப்தி ஏற்பட்டுள்ளதென்றும், சி. பி. கருணகர மேனன், டாக்டர் ஏ. ஆர். மேனன், சி. நாராயணப் பிள்ளை போன்ற பிரபல்யமான காங்கிரஸ் தலைவர்கள்கூட காங்கிரஸின் போக்கைக் கண்டு வெளியேறி விட்டனரென்றும் கூறினர்.

கம்யூனிஸ்டுக் கட்சியும் ஏனைய இடதுசாரிக் கட்சிகளும் ஒரு குறைந்தபட்ச திட்டத்தின் அடிப்படையில் தேர்தலில் போட்டியிட முடியும் என்றும், இக் கட்சிகள் ஒன்றுகூடிப் பேசினால் இது சாத்தியமென்றும் தெரிவித்தார். தேர்தலில் கம்யூனிஸ்டுக் கட்சி முதன்மையான ஸ்தானத்தை அடைந்தாலும் மற்ற கட்சிகளுடன் செய்துகொண்ட தேர்தல் உடன்பாட்டின் அடிப்படையிலேயே நடந்துகொள்ளும் என்றார்.

கேரளத் தலைநகரத்தைப் பொறுத்தவரை கம்யூனிஸ்டுக் கட்சி இதை ஒருபெரிய பிரச்னை ஆக்க விரும்பவில்லை என்றார்.

## விலை உயர்வை ஏன் சர்க்கார் தடுக்கவில்லை?

திருநெல்வேலி, அக். 10—
நெல்லை சோஷலிஸ்ட் கட்சிக் கூட்டம் தோழர் ரங்கநாதன் தலைமையில் சென்ற 7-ந் தேதி நடைபெற்றது. ஈரோடு தோழர் சின்னச்சாமி பேசுகையில், உணவுப் பொருள்களின் விலை உயர்வுக்கு தான்ய வியாபாரிகளின் பதுக்கல் கொள்கையே காரணமென்றும், சென்ற மாதத்தில் மட்டும் 300 கோடி ரூ. பெறுமான தான்யங்களை பேங்குகளில் ஈடுவைத்து வியாபாரிகள் கடன் வாங்கியுள்ளதாகவும், அரசாங்கத்துக்கு இதுவிவரம் தெரிந்திருந்தும், நடவடிக்கை எதுவும் எடுக்காது வாளாயிருக்கின்றன என்று கண்டனம் செய்தார்.

## அபராதம் வாபஸ்

மதுரை, அக். 8 -
மதுரை மாணவர்கள கல்லூரியில் வேலை செய்துவரும் தோழர்கள் நாராயணன், தத்துவம் இருவர்மீதும் போலீஸால் போடப்பட்ட வழக்கில் தலா ரூ. 5 அபராதம் விதிக்கப்பட்டது. அபராதம் செலுத்துவதற்கு அவகாசம் அளிக்கப்படாமலேயே சிறைக்குள் தள்ளப்பட்டனர்.

இதை எதிர்த்து ஜில்லா மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் அப்பீல் செய்யப்பட்டது. ஜில்லா மாஜிஸ்டிரேட் அபராதத்தைத் திருப்பிக் கொடுத்து மறுபடியும் விசாரிக்குமாறு உத்தரவிட்டார். தோழர்களுக்காக திரு. கே. சேதுராமன் வழக்காடினர். (ந-நி.)

# கிழக்குக்கு ஒரு சட்டம் மேற்குக்கு ஒரு சட்டம்!
## பாகிஸ்தானில் அலங்கோலம்

டாக்கா, அக். 9—
கிழக்கு பாகிஸ்தானில் கூட்டுத் தொகுதி முறையையும், மேற்கு பாகிஸ்தானில் தனித் தொகுதி முறையையும் அமல் நடத்துவதென்று அவாமி லீக்—குடியரசுக் கட்சி கூட்டு சர்க்கார் முடிவு செய்துள்ளதாக இன்று பாகிஸ்தான் பிரதமர் சுராவர்தி அறிவித்தார். இது சம்பந்தமாக நாளை தேசிய சட்டசபையில் ஒரு மசோதா கொண்டு வரப்படுமென்று அவர் கூறினர்.

கூட்டுத் தொகுதி முறையை ஜின்னுவின் சகோதரி பாத்திமா ஜின்னுவும் மற்றும் மேற்கு பாகிஸ்தானிலுள்ள லீக் தலைவர்களும், பத்திரிகைகளும் எதிர்த்துள்ளனர்.

## ஒரு லட்சம் ஏக்கர் புஞ்சை நிலத்தில் கிணறுகள் வெட்டித்தருக

வேலூர் (சேலம்), அக். 10—
நேற்று முன்தினம் நடைபெற்ற கம்யூனிஸ்ட் கட்சியின் வேலூர் ஏரியாக் கமிட்டிக் கூட்டத்தில், பரமத்தி, கபிலர் மலை, மோகனூர் பிர்க்காக்களில் உள்ள சுமார் 1 லட்சம் ஏக்கர் புஞ்சை நிலங்களில் கடந்த 10 வருட காலமாகப் பருவமழை சரியாகப் பெய்யாததால் விவசாயிகள் தாங்க முடியாத கஷ்டத்திற்காளாகியுள்ளனரென்றும், ஆகவே அந்நிலங்களில் கிணறுகள் வெட்டிக் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்த ஜில்லாக் கலெக்டரைப் பேட்டி காண்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

அதற்காக, இம்மாதம் 15-ந் தெதி முதல், மேற்குறிப்பிட்ட கோரிக்கை கொண்ட மகஜரில் 5000 கையெழுத்துகள் வாங்குவதெனவும், மாதக் கடைசியில் விவசாயிகளை ஊர்வலமாக அழைத்துச்சென்று ஜில்லா கலெக்டரைப் பேட்டி காண்பதென்றும் முடிவு செய்யப்பட்டது.

கூட்டத்திற்குத் தோழர் வி. இளங்கோ தலைமை வகித்தார். (ந. நி.)

## பாரத யுவர் சங்கம்

மதுரை, அக். 10—
மதுரை வியாசராயர்புரம் பாரதயுவர் சங்கம் ஆரம்ப விழா சென்ற 2-ம் தேதி மதுரை நகர சபை உறுப்பினர் திரு என். ஆர். ராமகிருஷ்ணன் தலைமையில் நடைபெற்றது. சங்க அமைப்பாளர் (கன்வீனர்) திரு. என் ஹரிஹரன் அனைவரையும் வரவேற்றுப் பேசினர். பின்னர் திருவாளர்கள் திலகம் ரகுநாதன், கிம்சி சீனிவாசன், எம். என். ராமனுதன் முதலியோர் பேசினர்.

## பகவதி விலாசில் வெற்றி

சென்னை, அக். 8—
வேலையிலிருந்து நீக்கப்பட்ட பகவதி விலாஸ் ஓட்டல் தொழிலாளி நாராயண நாயருக்கு, ரூ. 400 நஷ்டஈடு கொடுக்கும்படி தொழில் கோர்ட் உத்தரவிட்டது. தொழிலாளிக்கு மதராஸ் ஓட்டல் தொழிலாளர் சங்க உப தலைவர் சங்கரநாராயணனும் பொதுக்காரியதரிசி கே. எம். ஹரிபட்டும் ஆஜரானர்கள்.

# மடத்து ஏஜெண்டு பணிந்தார்
## மலையடிப்புதூர் விவசாயிகள் வெற்றி

நாங்குனேரி, அக். 10—
நாங்குனேரி ஜீயர் மடத்திற்குச் சொந்தமான 250 ஏக்கர் நஞ்சை நிலம்மலையடிப்புதூர்கிராமத்தைச் சுற்றி இருக்கிறது. இதில் சுமார் 45 ஏக்கர் இரு போக நிலம். இந்தக் கார் மகசூலில் காலமழை சரிவர இல்லாமல், தண்ணீர் தட்டு ஏற்பட்டு மேனிக்குறைவு ஏற்பட்டது. இதனால் விவசாயிகள் அளக்க வேண்டிய பாட்டத்தில் 3 பாட்டம் தள்ளித் தர வேண்டுமென்றும், பாக்கி இல்லாமல் ரசீது வேண்டுமென்றும், மடத்து ஏஜெண்டிடம் மனுச் செய்து கொண்டனர். மடத்து ஏஜெண்டு முடியாதென்று சொல்லி மறுத்து விட்டார்.

விவசாயிகள், ஜில்லா விவசாயிகள் சங்கத்தின் சார்பாகக் கலெக்டருக்கும், சமரஸ அதிகாரிக்கும் மனுச் செய்துவிட்டு, 30-10-56-ல் அறுவடை செய்த நெல்லைக் களத்துமேட்டில் வைத்தார்கள். மடத்து ஏஜெண்டு போலீசை வரவழைத்து நெல்லுக்குக்காவல் வைத்தார். மழை வந்து நெல் நனைய ஆரம்பித்தபோதும் கூட, விவசாயிகள் தங்கள் நியாயமான கோரிக்கையில் வெற்றி கிடைக்கும்வரை போராடுவது என்று உறுதியாக நின்றனர். 4-10-56 ல் நாங்குனேரி தாசில்தார் சமரசம் செய்ய வந்தார். தாலூக்கா விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் மாணிக்கம் விவசாயிகளின் நியாயத்தை எடுத்துரைத்தார்.

பின்னர், அளக்க வேண்டிய பாட்டத்தில் 2 பாட்டம் தள்ளி அளப்பதென்றும், பாக்கி இல்லை என்று ரசீது கொடுக்க வேண்டுமென்றும் ஏற்பட்ட சமரசத்திற்கு மடத்து ஏஜெண்டு ஒப்புக்கொண்டார்.

இதுபோன்றே, கோயில்பத்து, சிதம்பரபுரம், இளம்பழங்குளம் ஆகிய இடங்களிலும் போராட்டம் நடந்துகொண்டிருக்கிறது. (ந. நி.)

## ஸ்ரீ. நாடாருக்கு ம. பொ. சி. செய்தி

விருதுநகர் அக். 9—
தங்கள் உடல் நிலை நாளுக்கு நாள் குன்றி வருவது குறித்து நெஞ்சம் வேதனைப்படுகிறது. உண்ணு விரதம் நல்ல குறிக்கோளுக்காகத் துவக்கப்பட்ட தென்பதை மக்கள் உணர்ந்து விட்டனர். தாங்கள் உண்ணுவிரதத்தை நிறுத்தி ஜனநாயக சக்திகளின் உதவியைப் பெற்று தங்களின் கொள்கைக்கு வெற்றி தேட வேண்டும். இது எனது வேண்டுகோள் என்று கேட்டுக் கொண்டிருக்கிறார். (ந.நி.)

## சங்கரலிங்கனருக்கு வேலூர் நகர சபை ஆதரவு

வேலூர், அக்.7 —
வேலூர் நகர சபைக் கவுன்சில் கூட்டம் 5-10-56ல் வ. உ. சிதம்பரம் பிள்ளை மண்டபத்தில் நடைபெற்றது.

அப்போது, 'நியாயமான கோரிக்கைகளுக்காக கடும் உண்ணுவிரதமிருந்துவரும் விருதுநகர் தேசபக்தர் திரு. க. பெ. சங்கரலிங்க நாடாரின் கோரிக்கைகளை சர்க்கார் தீர்த்து வைப்பதாக வாக்குறுதி கொடுத்து, அவரது உண்ணுவிரதத்தை நிறுத்த நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று இக்கவுன்சில் சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறது' என்ற தீர்மானத்தை கம்யூனிஸ்ட் ஆதரவு பெற்ற தோழர் டி. சீனிவாசன் கொண்டு வந்தார். அதை கவுன்சில் ஏகமனதாக அங்கீகரித்தது. (ந. நி.)

# மார்க்கெட் நிலவரம்
### தங்கம், வெள்ளி

சென்னை, அக். 11—

| | |
|---|---|
| சவரன் | 67-10-0 |
| தங்கம் ரெடி | 105-0-0 |
| மூசை தங்கம் | 103-8-0 |
| வெள்ளி 100 தோலா எடை | 174-4-0 |
| வெள்ளி 1 ரூபாய் எடை | 1-12-6 |
| **மணிலாப்பயறு** | |
| 531 ரா. கொண்ட பாரம் 1-க்கு விற்பனைவரி உள்பட புதிய சரக்கு | |
| உயர்ந்த ரகம் | 160-0-0 |
| சாதா | 157-0-0 |
| **மணிலா எண்ணெய்** | |
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி (மதராஸ்) கிடங்கு டெலிவரி 3% F. F. A. (மொத்த விலை ரெடி) | 307-0-0 |
| அக்டோபர் | 300-0-0 |
| **விளக்கெண்ணெய்** | |
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி) | |
| திருப்பத்தூர் | 315-0-0 |
| சேலம் "தாமரை" "அன்னம்" (37½ ரா. டின் உள்பட) | 24-0-9 |
| **தேங்காய் எண்ணெய்** | |
| 37½ ரா. கொண்ட டின் 1-க்கு (விற்பனை வரி தனி) | |
| கொல்லம் சரக்கு எம். எஸ். மார்க் | 27-8-9 |
| ராஜா மார்க்கு | 26-12-9 |
| அம்பு மார்க்கு | 26-12-9 |
| **சர்க்கரை** | |
| எக்ஸைஸ்வரி விற்பனை வரி உள்பட) பிரிட்டிஷ் சுத்தம் செய்யப்பட்ட சர்க்கரை (2 அந்தர்) | 90-0-9 |
| சாமல் கோட்டை (2 அந்தர்) | 94-0-9 |
| கிர்லாம்புடி (227 ரா) | 93-8-9 |

Regd. No.M. 5934
Printed & Published by S. KRISHNASWAMY, at Janasakthi Press. (Phone 2241) 32, Broadway, Madras-1,
Editor : P. JEEVANANDAM
REGISTERED AS A NEWS PAPER IN CEYLON